## சகூ. வேம்பற்றூர்க் கண்ணன் கூத்தனார்

வேம்பற்றூர் என்ற பெயருடைய ஊர்கள் சோழ நாட்டிலுமுள்ளன ஆயினும், பாண்டிநாட்டு வேம்பற்றூர், கடைச்சங்க காலந் தொடங்கி இன்றுவரையும் நல்ல புலவர்கள் பிறந்து சிறக்கும் ஊராக விளங்குதலின், கண்ணன் கூத்தனார் பிறந்த பேறுடைய ஊரும் அதுவே யாம் எனக் கொள்வர் ஆராய்ச்சியாளர். இவ் வேம்பற்றூர், மதுரைக்கு வடகிழக்கில், இரண்டு காதத்தில் வையை நதிக்கு வடக்கேயுளது. குலசேகர சதுர்வேதி மங்கலம் என்றும் இதற்குப் பெயருண்டு எனக் கல்வெட்டுக்களால் அறிகிறோம். இது, இப்போது வேம்பத்தூர் என வழங்கு கிறது. வேம்பற்றூரில் பிறந்த இவர், கூத்தாடும் தொழில் உடையவராவர்; இவர் இயற்பெயர் கண்ணன் என்பது.

தலைவன் வரைந்துகொள்ளாமையால் வருந்தும் தலை மகளின் நோய்க்காம் காரணத்தை அறிந்துகொள்ள மாட்டாத தாய், அந்நோய் முருகனால் வந்தது எனக் கொண்டு வேலனை அழைத்து வெறியாட்டெடுக்கத் தொடங்கிய வழி, தோழி, அந்நோய்க்காம் காரணம் இது என உண்மை உரைப்பாளாய்த், தாயின் அறியாமையினை யும், அவள் வேண்ட வந்த வேலனையும், அவர்கள் மேற் கொள்ளும் விழாவினையும் எள்ளி நகைக்கும் பகுதிகளைப் புலவர் நன்கு விளக்கியுள்ளார். தம் நோய்தீரப் பிற உயிர் களைக் கொல்லும் செயல் அறிவுடைமை யன்று என்பதை யும் குறிப்பாக உணர்த்தியுள்ளார்.

"முருகயர்ந்து வந்த முதுவாய் வேல!
சினவல் ஓம்புமதி; வினவுவது உடையேன்;
பல்வேறு உருவின், சில்லவிழ் மடையொடு
சிறுமறி கொன்று, இவள் நறுநுதல் நீவி
வணங்கினை கொடுத்தி யாயின், அணங்கிய
விண்டோய் மாமலைச் சிலம்பன்
ஒண்டார் அகலமும் உண்ணுமோ பலியே."

(குறுந்: கஉ௨)

தலைமகள் நோய்க்குக் காரணமாய தலைமகன், எவ்வாற்றானும் குறையுடையா னல்லன்; அவன் மலைவளம்பெற்ற மாண்புடையவன்; மணத்தாலும், நிறத்தாலும சிறந்த மலர்மாலை யணிந்த அழகும் உடையவன்; எனத் தலைமகளை மணத்தற்காம் மாண்புடையான் என்பதையும் தாய் உணருமாறு கூறிய தோழியின் அறிவாற்றலைப் புலப்படுத்தும் இச் செய்யுளைச் சிறு சிறு சொற்றொடர்களால், இழும் எனும் ஒலி தோன்றப் பாடிய புலவர் புலமையினைப் பாட்டைப் படித்தார் எவரும் போற்றுதிரார்.

---

## ௫௦. வேம்பற்றூர்க் குமரனூர்

சோழநாட்டில், தஞ்சை மாவட்டத்தில், திருமங்கலக் குடிக்கருகே ஒரு வேம்பற்றூர் உளது எனினும், குமரனூர் பிறந்த வேம்பற்றூர், வேம்பற்றூர்க் கண்ணன் கூத்தனூர் போன்ற சங்கப் புலவர்களின் பிறப்பிடமாய் விளங்கும் பாண்டியநாட்டு வேம்பற்றூரே என்று அறிஞர்கள் கருதுவர். வேம்பற்றூரில் பிறந்த புலவர்கள் அனைவரும் அந்தண ராகவே உள்ளனர் ஆதலின், இவரும் அந்தணரே; அவர் பெயரும் அந்தணர் என்பதை உறுதி செய்கிறது என்று கூறுவாரும் உளர். இக் கூற்று எத்துணை உண்மையுடை யது என்பதை எம்மால் துணிந்து கூறல் இயலாது; அறிஞர்களே முடிவு செய்து கொள்வார்களாக.

வேம்பற்றூர்க் குமரனூர், போர்வீரர் பண்பையும், அவர் ஆற்றும் போரால் பாழான நாட்டின் கேட்டையும் நன்கு உணர்ந்தவராவர்; பழந் தமிழ்வீரர், போர் வந்தது என்றதும், "அந்தோ! ஆனதோ வெஞ்சமர்!" என அலறித் துடிக்கும் உள்ளத்தவரல்லர்; போர் எனப் பூரிக்கும் தோளராவர்; போர் வந்தது எனில், தம் ஆண்மையின் ஆற்றலை அறியச் செய்வதற்காம் அரிய வாய்ப்பொன்று வந்தது என ஆரவாரிப்பர். அவ் ஆரவா ரம் அடங்கியபின்னர், "எமமையும் பகைக்கும் படை யாளர் உளரோ?" எனச் சினப்பர்: அச் சினத்தால், அவர் கண்கள் சிவப்பேறும்; அத்தகைய ஆண்மையாள ரர்வர் அக்காலப் படைவீரர் என அவர்கள் பண்பினைச் "செரு வேட்டுச் சிலைக்கும் செங்கண் ஆடவர்," என்ற அழகிய தொடரால், சுருங்கக்கூறி விளங்க வைத்துள்ளார்.

நாடு செழிக்க நல்லரசு நடைபெறும் நாட்களில், நாட்டார் காவியத்திலும், ஓவியத்திலும கருத்துடைய ராய்க் கலையுணர்ச்சி மிக்குவாழ்வர்; அக்காலை, அவர்கள் தங்கள் ஓவியப் புலமையினை உலகறியக் காட்டுவதற்காக, அழகிய ஓவியங்களை, ஊர் மன்றம்போலும் பலர் கூடும் இடந்தோறும் அழைத்து, அகம் குளிரக்கண்டு மகிழ்ந்து வாழ்வர்; இத்தகைய இன்ப வாழ்விற்குப் போர் உண்டா யின், இடையூறு உண்டாம்; பகைவர் படையால் பாழ்

பட்ட தம் ஊரில் வாழ வகையின்றி, மக்கள் வேறிடம் தேடிச்சென்று விடுவர்; அதனால், அவர் போற்றிவளர்த்த மன்றப் பாவைகள் பாழுறும்; மழை, பாவையின் வடிவினைச் சிதைக்கும்; வெயில், அதன் நிறத்தினை அழிக்கும்; இவ்வாறு, மக்கள் வாழ்விழக்க, மன்றப் பாவைகள் பாழான காட்சியினைக் கண்டு கலங்கிய புலவர் வேம்பற்றூர்க் குமரனார், அவ்வாறு பாழான பாவையைத் தலைவனைப் பிரிந்தமையால், வண்ணமும், வடிவமும் சிதைந்து வேறுபட்டுத் தோன்றும் தலைமகள் ஒருத்திக்கு உவமை காட்டித் தம் உள்ளத்துறு துயரை உணர்த்தியுள்ளார்:

"முனைபுலம் பெயர்த்த புல்லென் மன்றத்துப்
பெயலுற நெகிழ்ந்து, வெயிலுறச் சாஅய்
வினையழி பாவையின் உலறி
மனை யொழிந் திருத்தல்." (அகம்: கடுஎ)

வேமபற்றூர்க் குமரனார் பாடிய வல்லாண் முல்லை தழுவிய பாட்டொன்று புறநானூற்றில் உளது; அவ்வொரு பாட்டும், பொருள் தோன்றாவாறு சிதைந்து காணப்படுவதால், செய்யுள் நலத்தினைச் சிறக்க உணர முடியவில்லை. அதில் காணப்படும் ஒரு தொடர், அக் கால மக்கள், புலித்தோலையும், பாயையும தம் படுக்கைக்குரியனவாகக் கொண்டிருந்தனர் என்பதை உணர்த்துகிறது.

தம்பால் வந்து பொருள் வேண்டி நிற்பார் அனைவர்க்கும், அவர் விரும்புவன அளித்துப் போற்றும் பேரறிவினரும் கள்ளுண்பராயின், அறிவிழந்து, தாம் படுத்தற்காம் இடம் இது; தாம் படுத்தற்காகா இடம் இது எனப் பகுத்துணரும உணர்விழந்து, மனைமுன்றிற்கண்ணும் வீழ்ந்து, உறங்கிவிடுவர் எனக் கூறிக் கள்ளுண்டு களிப்பாரைப் பழித்துரைக்கின்றார் புலவர் குமரனார்.

"வந்து,
முன்றிற் கிடந்த பெருங்களி யாளற்கு
அதள்உண் டாயினும், பாய் உண் டாயினும்
யாதுண் டாயினும் கொடுமின்..........." (புறம்: ௩௨எ)